உ
ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை
ஓம் சிவாய நம :

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்




அருள்மிகு பைரவர், கந்தசுவாமி கோயில் செய்யூர்

**மதுரை டால்ஃபின் பள்ளியின் சார்பில்**
**"மகா சிவராத்திரி" விழாவினை முன்னிட்டு**
**இலவச சிறப்பு வெளியீடு - 27-2-2014**

இறைப்பணியில் ...



AR. ராமனாதன்

தேவகோட்டை அரு.லெ.வீடு டால்ஃபின் AR. ராமனாதன்
தலைவர் மற்றும் நிறுவனர், தேவகோட்டை
டால்ஃபின் ராமனாதன் தமிழ்ப்பணி மற்றும்
ஆன்மிகப்பணி அறக்கட்டளை, மதுரை - 10.
தாளாளர், டால்ஃபின் பள்ளி, மதுரை - 10.
Ph – 93451 69639, 99439 25200
Email: dolphinschool2009@gmail.com
Web: www.devakottaidolphinramanathan.com



உ
ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை
ஓம் சிவாய நம :

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்



அருள்மிகு வள்ளி தேவசேனா சமேத ஸ்ரீ கந்தசுவாமி, செய்யூர்

**மதுரை டால்ஃபின் பள்ளியின் சார்பில்**
**"மகா சிவராத்திரி" விழாவினை முன்னிட்டு**
**இலவச சிறப்பு வெளியீடு - 27-2-2014**

இறைப்பணியில் ...



AR. ராமநாதன்

தேவகோட்டை அரு.லெ.வீடு டால்ஃபின் AR. ராமநாதன்
தலைவர் மற்றும் நிறுவனர், தேவகோட்டை
டால்ஃபின் ராமநாதன் தமிழ்ப்பணி மற்றும்
ஆன்மிகப்பணி அறக்கட்டளை, மதுரை - 10.
தாளாளர், டால்ஃபின் பள்ளி, மதுரை - 10.
Ph – 93451 69639, 99439 25200
Email: dolphinschool2009@gmail.com
Web: www.devakottaidolphinramanathan.com



உ
ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை
ஓம் சிவாய நம :

Dolphin Public School

மதுரை டால்ஃபின் பள்ளி

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்





செய்யூர் அருள்மிகு கந்தசுவாமி திருக்கோயிலில்
விநாயகர் மற்றும் வில்லேந்திய முருகன்





செய்யூர் அருள்மிகு கந்தசுவாமி திருக்கோயிலில்
ஸ்ரீ சோமநாதர் சுவாமி, ஸ்ரீ மீனாட்சியம்மை

Dolphin Public School


இறைப்பணியில் ...

AR. ராமனாதன்

தேவகோட்டை அரு.லெ.வீர டால்ஃபின் AR. ராமனாதன்
தலைவர் மற்றும் நிறுவனர், தேவகோட்டை
டால்ஃபின் ராமனாதன் தமிழ்ப்பணி மற்றும்
ஆன்மிகப்பணி அறக்கட்டளை, மதுரை - 10.
தாளாளர், டால்ஃபின் பள்ளி, மதுரை - 10.
Ph – 93451 69639, 99439 25200
Email: dolphinschool2009@gmail.com
Web: www.devakottaidolphinramanathan.com


Dolphin Public School

Dolphin Public School







## விநாயகர் துதி

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்து அடி போற்றுகின்றேனே.

வாக்கு உண்டாம்: நல்ல மனமுண்டாம்: மாமலராள்
நோக்கு ண்டாம்: மேனி நுடங்காது – பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு



ஸ்ரீ பைரவ காயத்ரீ
ஓம் ஸ்வானத்வஜாய வித்மஹே!
ஸுலஹஸ்தாய தீமஹி
தந்நோ பைரவ : ப்ரஜோதயாத்!

## இலுப்பைக்குடி பைரவர் தோத்திரம்

ஒரு கையிலுடுக்கு மற்றையொரு கையினாக பாச
மொருகையின் முத்தலை சூலொரு கையிற்
கபாலங்கொண்டீ
ரிருகையுங் குரைப்பாமோத்தையிசைக்கு நாய் சூழவில்வ
மிருகையுங் சூழ்வனத்திலியல் வயிரவன் தாள் போற்றி !

சதாவதானம் சுப்பிரமணிய அய்யர்

# தேய்பிறை அஷ்டமியில் தேயாத வாழ்வுதரும் செய்யூர்

[27 நட்சத்திர பூத வேதாளகணங்கள் புகழ் கந்தனும், பைரவரும் ஒருங்கே அருளும் திருப்புகழ் திருக்கோயில்]



தேய்பிறை அஷ்டமியில் தேயாத வாழ்வுதரும் **செய்யூர்** எனும் திருத்தலம் **சென்னை - திண்டிவனம் நெடுஞ்சாலையில் மேல்மருவத்தூரிலிருந்து நேர் எதிரில் கிழக்கில் 18 கி.மீ. தூரத்திலும், சென்னை - புதுச்சேரி கிழக்கு கடற்கரைச் சாலையில் மாமல்லபுரம், கல்பாக்கம், கூவத்தூர் தாண்டி "எல்லையம்மன் கோயில்" பேருந்து நிறுத்தம் வந்தடைந்து மேற்கே 3 கி.மீ. தூரத்திலும் இத்தலம் அமைந்துள்ளது.** பூம்புகார் நகரில் நாளங்காடி எனும் ஒரு கடைத்தெருவில் பூதகணம் ஒன்று குடி கொண்டிருந்தது. அதற்குச் சோழநாட்டு மக்கள் பொங்கலிட்டு, பூஜை செய்து வணங்கி வந்துள்ளனர். இதனை இளங்கோவடிகள் தனது சிலப்பதிகாரத்தின் இந்திரவிழாவூரெடுத்த கதையில் விவரித்துள்ளார். மேலும் பராந்தக மாறன் சடையன் காலத்தைச் சேர்ந்த மதுரை யானைமலை லாடன் கோயில் எனப்படும் முருகன் கோயில் கருவறையில் முருகனும், தேவயானையும் அமர்ந்த கோலத்தில் காட்சி அளிக்கின்றனர். கருவறையின் கோஷ்டத்தில் பூதகணங்களின் சிற்பங்கள் உள்ளன. பூத கணங்களின் வழிபாடு என்பது பண்டைக்காலத்திலேயே இருந்து வந்துள்ளதை நாம் அறிய முடிகிறது.

*"வேதநாயகன் வேதியர் நாயகன்*
*பூதநாயகன் புண்ணிய மூர்த்தியே...."*

(ஆதிபுராணத் திருக்குறுந்தொகை – திருநாவுக்கரசர்)

*"புடைசூழ்ந்த பூதங்கள் வேதம்பாடப்*
*புலியூர்ச் சிற்றம்பலத்தே நடமாடுவார்"*

(திருநாவுக்கரசர்)

*"நீடு காடு இடமாய் நின்ற பேய்க்கணம்*
*கூடு பூதம் குழுமிநின்று ஆர்க்கவே*
*ஆடினார் அழகு ஆகிய நால்மறை*
*பண்ணினார் அவர் பாலைத்துறையரே"*

(திருப்பாலைத்துறை – திருக்குறுந்தொகை – திருநாவுக்கரசர்)

*"......பூதக்கணம் வெருட்டும் வேடத்தின*
*திலகம் ஆரும் பொழில் சூழ்ந்த தேவன்குடி*
*அலர்தயங்கும் முடி அடிகள் வேடங்களே"*

(திருந்துதேவன்குடி – திருஞானசம்பந்தர்)

*"......பொன்னை வென்ற கொன்றையான் பூதம் பாட ஆடலான்*
*கொல் நாவிலும் வேலினான் கோடிகாவு சேர்மினே"*

( திருக்கோடிகா – திருஞானசம்பந்தர் )

*"பண்தலைக் கொண்டு பூதங்கள் பாட நின்றாடும்*
*வெண்தலைக் கருங்காடு உறைவேதியன் கோயில்"*

(திருச்சாய்க்காடு – திருஞானசம்பந்தர்)

*"வேதம் ஓதும் விரிசடை அண்ணலார்*
*பூதமாட நின்றாடும் புனிதனார்"*

( திருவிடைமருதூர் – திருநாவுக்கரசர் )

*".......புறம்தாழ் சடைதாழப் பூதம் சூழப்*
*புலியூர்ச்சிற்றம்பலமே புக்கார் தாமே"*

(புத்தகத்திருத்தாண்டகம் – திருநாவுக்கரசர்)

*"........வேதான தாளங்களுக்கு இசைய ஆடுவார்"*

(மயில் விருத்தம் – அருணகிரிநாதர்)

திருக்கயிலை மலையில் சிவபெருமானுடன் நடனமாடும் பெரும்பாக்கியம் பெற்றவை சிவபூதகணங்கள். மேலும்

பூதவேதாள கணங்களின் தாளத்திற்கேற்ப தில்லைச்சிற்றம்பலத்தில் நடராஜப் பெருமான் திருநடனம் ஆடி இவ்வுலகை இயக்குகிறார். ஈசனின் கட்டளைப்படி சம்பந்தருக்கு திருவாவடுதுறை தலத்தில் உலவாப் பொற்கிழியையும், பட்டீஸ்வரம் எனும் தலத்தில் முத்துச் சிவிகையையும் கொண்டுவந்து கொடுத்தவை பூதவேதாளகணங்களேயாம். திருமுருகன் பூண்டியில் சிவபெருமானின் கட்டளைப்படி வேடர்களாக வந்து, சுந்தரமூர்த்தி நாயனார் சுவாமிகளிடம் திருவிளையாடல் நடத்தியவையும் பூதவேதாளங்களே. இவ்வாறு ஈசனின் கட்டளைகளை ஏற்று அவற்றை ஈசனின் அருளுடன் நொடிப்பொழுதில் நிறைவேற்றுபவை பூதகணங்களே.

பிரதோஷ பூஜை, சிவராத்திரி பூஜை, சோமவார பூஜை இவைகளை பூவுலகில் தவறாமல் கடைபிடிப்பவர்களின் ஆயுள்காலத்திற்குப் பிறகு, நம்மை பெரும்பதமாகிய ''திருக்கயிலை'' சிவலோகத்துக்கு அழைத்துச் செல்பவர்களும் சிவபூத கணங்களே. "பூத கணாதி சேவிதம்" பூத வேதாள கணங்கள் சேவிக்கும் விநாயகப் பெருமான் என்ற பொருள். "பூதநாத ! ஸதா நந்த ! ஸர்வபூத தயாபர" என்று ஐயப்ப சுவாமியை பூதகண நாயகனாக கூறுகிறது. "ஸ்ரீசாஸ்தா தசகம்". நம் தமிழகத்தின் தென்கோடியில் கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோவில் அருகே உள்ள பூதப்பாண்டி எனும் தலத்தில் ஈசன் ஐம்பூதங்களின் வடிவாக "பூதலிங்கசுவாமி" என்ற திருநாமத்தில் சிவகாமி அம்பாளுடன் எழுந்தருளி உள்ளார். இது ஒரு பழமை வாய்ந்த குடைவரைக் கோயிலாகும். இங்கு பூதவேதாளங்களின் தலைவராக பைரவர் "பூதநாதர்" என்ற திருநாமத்தில் பீட வடிவில் அருள்கிறார். இத்திருக்கோயிலில் துவாரபாலகர்களுக்கு பதிலாக பூதவேதாள கணங்களே உள்ளன.

தினமும் அர்த்த ஜாமபூஜை கொடிமரம் அருகிலுள்ள இந்த பூதவேதாள பூஜையுடன் நிறைவு பெறுகிறது. அதுபோல்







நம் தமிழகத்தின் வடகோடியில் அருணகிரிநாதரால் "கந்தர் அனுபூதி" யில் போற்றப்படும் "வேதாளகணம் புகழ் வேலவன்" அருளும் செய்யூர் கந்தசுவாமி பைரவர் ஆலயம் உள்ளது. 27 நட்சத்திரங்களுக்குரிய 27 பூதவேதாளகணங்கள் வணங்கும் முருகப்பெருமானைக் கண்டுய்ய ''செய்யூர்'' திருத்தலம் வாருங்கள். சிவபெருமானின் சேய் (குழந்தை) ஆன முருகப்பெருமான் அருள்வதால் இவ்வூர் "சேயூர்" (சேய் + ஊர்) என்றாகி இன்று "செய்யூர் என்றழைக்கப்படுகிறது. "சேய்" (குழந்தை) வரம் தரும் முருகன் உறையும் தலம் ஆதலால் சேயூர் என்றானது" என்றும் கூறுகிறார்கள். ஆம்! இத்தல முருகனை வழிபட்டால் "சேய்வரம்" (மழலைவரம்) நிச்சயம் என்கின்றனர். மேலும் நம் வீட்டு "சேய்" (குழந்தை)களுக்கு ஏற்படும் பாலாரிஷ்டம் முதலிய தோஷங்களையும், நோய்களையும் களைந்தெறியும் வல்லமை உள்ளவன் இந்த செய்யூர் கந்தசுவாமி என்கின்றனர். வளவன் எனும் சோழ மன்னன் ஆண்டதால் "வளவாபுரி" என்றும் இவ்வூர் அழைக்கப்பட்டது. தெற்கு நோக்கிய பிரதான நுழைவு வாயிலைக் கொண்ட இச்செய்யூர் கந்தசுவாமி திருக்கோயிலின் கருவறை கிழக்கு நோக்கி அமைந்து உள்ளது. 27 நட்சத்திரத்துக்குரிய 27 பூதவேதாள கணங்களும் இவ்வாலயத்தின் வெளிப்பிரகார மதிற்சுவரில் உள்ளன. அனைத்தும் சுமார் மூன்றடி உயரம் உள்ளவை. பூதவேதாள கணங்கள் செய்யூர் கந்தசுவாமி திருக்கோயிலுக்கு வந்ததெப்படி? ஒருகாலத்தில் காசி முனிவருக்கும், மாயை என்பவளுக்கும் சூரபத்மன், சங்கமுகன், தாரகன் என மூன்று அசுரகுமாரர்கள் பிறந்து, கடும்தவம் புரிந்து ஈசனிடம் எண்ணற்ற வரங்களைப் பெற்று, அகந்தையால் தேவர்களை துன்புறுத்தி வந்தனர். அவர்களுக்கு அஞ்சிய தேவர்கள் பல இடங்களில் மறைந்து வாழ்ந்தனர். ஒருநாள் தேவர்கள் அசுரகுமாரர்களுக்கு அஞ்சி அழிஞ்சல் மரங்கள் நிறைந்த வனப்பகுதியில் மறைந்திருந்தனர். அழிஞ்சல் வனப்



பகுதிக்குள்ளும் ஊடுருவிய அசுரர்கள் தேவர்களை துன்புறுத்தினர். கலக்கமுற்ற தேவர்கள் அழிஞ்சல் வனப்பகுதியில் இருந்தபடியே ஈசனைத் துதித்து தங்களைக் காப்பாற்ற வேண்டினர். அப்போது அழிஞ்சல் மரங்கள் நிறைந்த அப்பகுதிக்குள் ஜோதி வடிவில் ஈசன் அம்பிகையுடன் தேவர்களுக்கு காட்சி கொடுத்து அபயமளித்தார். தன்னிலிருந்து பைரவரை தோற்றுவித்தார். பைரவரிடமிருந்து அனேக பூதகணங்கள் தோன்றின. பைரவர் நந்தியெம் பெருமானையும், கணபதியையும் அழைத்துத் தமது பூதகணப்படைகளுக்கு தலைமையேற்கும் படிச்செய்தார். விநாயகரும், நந்தியெம்பெருமானும் அசுரர்கள் மீது படையெடுத்து வென்றனர். இறுதியில் சூரபத்மனின் முதன்மை தளபதி மகாதமிஷ்ட்ரன் அவனது துணைத்தளபதிகளான மணி, மல்லர் என்பவர்களை அழைத்துக்கொண்டு பைரவரை எதிர்த்தான். பைரவர் அவர்கள் மீது தனது சூலத்தை வீசி அழித்து தேவர்களுக்கு அபயம் அளித்தார். தேவர்கள் பைரவரைத் துதித்துப் போற்றினர். பைரவர், “தேவர்களே ! வெகுவிரைவில் ஈசனின் நெற்றிக்கண்ணிலிருந்து ஆறுமுகப்பெருமான் தோன்றி சூரபத்மனை அவன் தம்பிகளான சிங்கமுகன், தாரகனுடன் போரில் அழித்திடுவான்'' என்று அருளினார். பின்பு அந்த அழிஞ்சல் வனத்தில் தேவர்கள் தங்களுக்கு காட்சி தந்த ஜோதிவடிவ ஈசனை “வளரொளிநாதர்” என்ற பெயரில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வழிபட்டனர். அவரது உடனுறை சக்தியாக வடிவுடை அம்பாளையும் ஸ்தாபித்தனர். பின்பு அசுரகுடும்பத்தை அழித்த பைரவரை, அவருக்கு போரில் உதவிய பூதவேதாள கணங்களுடன் அவ்வனத்தில் எழுந்தருள வேண்டினர். உடனே பைரவர் பூதகணங்களை தன்னுள் அடக்கி வளரொளி நாதருக்கும், வடிவுடை அம்பாளுக்கும் நடுவில் கோயில் கொண்டார். அவ்வாறு பைரவர், கோவில் கொண்ட இடமே இன்றைய காரைக்குடி பிள்ளையார்பட்டி அருகிலுள்ள ''வைரவன்பட்டி'' ஆகும். பைரவர்

தேவர்களிடம் கூறியபடி ஈசனின் நெற்றிக்கண்ணிலிருந்து ஆறுமுகப் பெருமான் தோன்றி நிலமார்க்கமாக திருப்பரங்குன்றத்திலும், ஆகாயமார்க்கமாக திருப்போரூரிலும், கடல் மார்க்கமாக திருச்செந்தூரிலும் அசுரர்களுடன் போரிட்டார். பூதகணங்களும் அவருக்கு துணை நின்றன.

முருகப்பெருமான் சிங்கமுகாசுரன், தாரகனுடன் போரிட்டு வென்று சிங்கமுகாசுரனை சிங்கமாக மாற்றி அம்பிகைக்கு வாகனமாக்கினார். தாரகனை யானையாக மாற்றி அய்யனாருக்கு வாகனமாய் ஆக்கினார். இறுதியில் நாகப்பட்டினம் அருகிலுள்ள "சிக்கல்" எனும் தலத்திலுள்ள "வேல் நெடுங்கண்ணி" அம்பிகையிடம் "சிவசக்தி வேல்" வாங்கி, திருச்செந்தூரில் சூரனை சம்ஹாரம் செய்தார் முருகப்பெருமான். ஆம்! பற்பல மாயங்கள் புரிந்து கடலுக்குள் மாமரமாய் நின்ற சூரனின் மீது "சிவசக்தி வேலை" வீசி இரண்டாகப் பிளந்தார் முருகப்பெருமான். சூரன் சம்ஹாரம் ஆனான். சூரனின் வேண்டுகோளின்படி மாமரத்தின் ஒருபகுதியை மயில் ஆக்கி தனது வாகனமாகவும், மற்றொரு பகுதியை சேவல் ஆக்கி தனது கொடியாகவும் வைத்துக் கொண்டார் ஆறுமுகன். தேவர்கள் மகிழ்ச்சியில் முருகனை "தேவசேனாபதி" என்றழைத்தனர். இந்திரன் தனது மகள் தெய்வானையை பரிசாக முருகப்பெருமானுக்கு திருப்பரங்குன்றத்தில் மணம் முடித்துக் கொடுத்தார். வள்ளியை காதல் மணம் புரிந்தார். பின்பு வள்ளி, தெய்வானையுடன் முருகப்பெருமான் திருக்கயிலை மலையில் உள்ள கந்தவெற்பில் குடிபுகுந்தான். பக்தர்களின் இதயக்கூட்டுக்குள்ளும் குடி புகுந்தான். சூரபத்மனை போரில் வதைக்க முருகப்பெருமானுக்கு உதவிய பைரவரின் பூதவேதாள கணங்கள் வள்ளி, தெய்வானையுடன் முருகப்பெருமான் வீற்றிருக்கும் திருக்கோலத்தைக் காண விரும்பி பைரவரிடம் கோரிக்கை

வைத்தன. பைரவர் முருகப்பெருமானிடம் பூத வேதாளங்களின் கோரிக்கையைச் சொன்னார். மகிழ்ந்த முருகப்பெருமான், "ஈசன் ஆட்சீஸ்வரராய் அருளும் அச்சிறுப்பாக்கம் அருகிலுள்ள சேயூர் எனும் பதியில் யாம் அனுதினமும் ஈசனை ஆராதிக்க உள்ளோம். அங்கு பூதவேதாள கணங்கள் வந்தால் அவர்களுக்கு துணைவியர் சகிதமாகக் காட்சி கொடுப்போம்" என்று கூற பைரவரும் பூதவேதாளங்களைக் கூட்டிக்கொண்டு சேயூர் வந்தமர்ந்தார். சேயூர் எனும் செய்யூரிலுள்ள சோமநாதரை தினமும் அர்த்தஜாமத்தில் இத்தல கந்தசுவாமியும், இங்குள்ள 27 நட்சத்திர பூதவேதாள கணங்களும் வழிபடுகிறார்கள். கருவறையில் சோமநாதர் வீற்றிருக்க துவாரபாலகர்களாக மகாவிஷ்ணுவும், பிரம்மாவும் இருப்பது சிறப்பு. முருகனின் திருவுளப்படி 1934-ம் ஆண்டில் தெற்குபார்த்த வண்ணம் மீனாட்சி அம்மன் பிரதிஷ்டை ஆகி உள்ளனர். தினமும் இங்கு முருகப்பெருமான் அர்த்த ஜாமத்தில் சோமநாதரையும் மீனாட்சி அம்மனையும் வழிபடுகிறார். அவரது சிவபூஜைக்கு இடையூறு நேராமல் காப்பதற்காகவே பிரம்மாவும், விஷ்ணுவும் துவாரபாலகர்களாக ஈசனின் கருவறைச் சந்நிதியில் உள்ளனர். எனவே, இத்தலத்தில் வழிபட்டால் மும்மூர்த்திகளையும் வழிபட்ட பெரும் புண்ணியம் கிட்டும். அசுரர்களை அழிக்க பைரவருக்கும், சூரனை அழிக்க முருகப்பெருமானுக்கும் போரில் துணை நின்ற பூதவேதாள கணங்களே இங்கு 27 பூதவேதாளகணங்களாக உள்ளன. அதுவும் 27 நட்சத்திரங்களுக்கும் உரித்தானவையாக உள்ளன. அருணகிரிநாதர் தனது 1292-வது திருப்புகழ் பாடலில்,

*"அதல சேடனாராட அகில மேரு மீதாட*
*அபின காளி தானாட அவளோடன்*
*றுதிர வீசி வாதாடும் விடையி லேறு வாராட*
*அருகு பூத வேதாள மவையாட*

.........................................................

.........................................................

*மயிலுமாடி நீயாடி வரவேணும்"*

என்கிறார். மேலும் தனது "கந்தர் அனுபூதி" யின் 38-வது பாடலில்,

*"ஆதாளியை ஒன்றறியேனை அறத்*
*தீதாளியை ஆண்டது செப்புமதோ!*
*கூதாள கிராத குலிக்கு இறைவா*
*வேதாளகணம் புகழ் வேலவனே!"*

என்கிறார். பூத வேதாள கணங்கள் வேறு எவருக்கும் கட்டுப்படாமல் பைரவருக்கு மட்டுமே அடங்குபவையாதலால் பைரவருக்கு உரிய தேய்பிறை அஷ்டமி நாட்களில் இத்தலத்தில் அவரவர் நட்சத்திரத்துக்குரிய பூத வேதாள கணங்களை வழிபட்டு, தங்கள் பிரார்த்தனைகளை பைரவர் மூலமாக முருகப்பெருமானிடம் சேர்த்து தங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொண்டவர்கள் பற்பலர். இத்தல வெளிப்பிரகாரத்தில் உள்ள பிரதான விநாயகரை வணங்கி விட்டு ஆலயத்துக்குள் நுழையும் போது 5 அடி உயரத்தில் மேற்கு பார்த்த வண்ணம் சூரிய பகவான் "சிவசூரியன்" ஆக அருள்பாலிக்கிறார். சிவசூரியனுக்கு நேர் எதிரில் முருகப்பெருமான் தினமும் பூஜிக்கும் ஸ்ரீசோமநாதரும், ஸ்ரீ மீனாட்சி அம்மனும் அருள்கிறார்கள். ஸ்ரீ சோமநாதர் கிழக்கு நோக்கியும், மீனாட்சி அம்மன் தெற்கு நோக்கியும் அருள்கிறார்கள். துவாரபாலகர்களாக மகாவிஷ்ணுவும், பிரம்மாவும் இருக்க நந்தி எதிரில் உள்ளார். இத்தல சோமநாதரை வழிபட்டாலே மும்மூர்த்திகளையும் வழிபட்ட பெரும்பேறு கிட்டும். சோமநாதரை ஒவ்வொரு திங்கள் கிழமை, பிரதோஷ நாட்கள் மற்றும் மாதாந்திர சிவராத்திரி நாட்களிலும் 5 நெய்தீபமேற்றி, திருநாவுக்கரசரின் "திருஅங்கமாலை" பதிகம் பாடி வழிபட்டால் சகல

உடற்பிணிகளும், கிரக பீடைகளும் அகலும் என்கிறார்கள். சோமநாதர் சந்நிதியின் தென்புறம் பள்ளியறை உள்ளது. சோமநாதர் சந்நிதியின் வடப்புறம் உள்ள வாயில் வழியே உட்சென்றால் ஆலய பிரதான மண்டபம். அங்கே மூலவராக முருகப்பெருமான், கந்தசுவாமியாக வள்ளி, தெய்வானையுடன் ஒரு முகம், நான்கு திருக்கரங்களுடன், வேலும், மயிலும் உடனிருக்க அபயஹஸ்தம் தாங்கி கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறார். அதி அற்புத பேரழகு பொதிந்த முகம். கருவறையில் முருகன் நிஜமயிலுடனும், தனது இரு பெண் மயில்களான வள்ளி தெய்வானையுடன் இருக்கும் அழகையும் காணும் போது,

***"மயிலாக நான் மாற வேண்டும்.***
***வள்ளி மணவாளன் என் தோளில் விளையாட வேண்டும்"***

என நம் மனது குதூகலிக்கிறது. துவாரபாலகர்களாக சுவீரனும், சுஜனனும் உள்ளனர். கருவறையின் வெளியே வாயிலின் இருபுறமும் விநாயகரும், கஜலட்சுமியும் உள்ளனர். கருவறையின் வெளிச்சுற்று கோஷ்டங்களில் முருகப்பெருமானே பஞ்ச கோஷ்ட மூர்த்தியாக அருள்கிறார். நிருத்திய ஸ்கந்தர், பால ஸ்கந்தர், பிரம்ம சாஸ்தா, சிவகுருநாதர், வேடுவர் (புளிந்தர்) இவர்களே பஞ்சகோஷ்ட மூர்த்திகள். நர்த்தன விநாயகருக்குப் பதிலாக நிருத்திய ஸ்கந்தரும், தட்சிணாமூர்த்திக்கு பதிலாக சிவகுருநாதரும், பிரம்மாவுக்குப் பதிலாக பிரம்ம சாஸ்தாவும், லிங்கோத்பவருக்குப் பதிலாக பாலஸ்கந்தரும், துர்க்கை அம்மனுக்குப் பதிலாக புளிந்தர் எனும் வேடுவரும் உள்ளனர். குருதோஷம் உள்ளவர்களும், குருவருள் வேண்டுபவர்களும் சிவகுருநாதரை வியாழக்கிழமைகளில் 3 நெய்தீபம் ஏற்றி வழிபட வேண்டும். தலைவிதியை நொந்து கொள்பவர்கள் இத்தல பிரம்ம சாஸ்தாவை வழிபட்டால் தலைவிதியையே மாற்றி அமைப்பான் முருகன். பிரம்மன் பிரணவத்தை மறந்ததால் அவனை சிறையிலிட்டு படைப்புத் தொழிலை மேற்கொண்ட முருகப்பெருமானின் அதி அற்புத வடிவே



பிரம்ம சாஸ்தா என்பது. எனவே, இத்தல கோஷ்டத்திலுள்ள பிரம்மசாஸ்தாவை புதன்கிழமைகளில் 6 நெய்தீபமேற்றி, "சுவாமிமலை கந்தர் சஷ்டி கவசம்" படித்து வந்தால் நம் தலையெழுத்தே நல்விதமாய் மாறும். இதனைத் தொடர்ந்து ஆறு வாரங்கள் செய்து வரவேண்டும். வறுமை, பிணி அகலும், கல்வி கேள்விகளிலும் சிறந்து விளங்கலாம்.

***"பிரணவ மந்திரத்தை மறந்தான் பிரம்மனே அவனைச்
சிறையினிலே அடைத்தான் முருகனே அதனால்
கந்தனிடம் பிரம்மனும் மிரளுவான்
கந்தன் அடியவர்க்கு அவனும் அருளுவான்".***

கருவறைவலம் வரும் போது நிறைவாக பிரதான மண்டபத்தின் கிழக்கு வாயிலின் உள்நுழைவில் இருபுறமும் பைரவரும், குஹசூரியனும் மேற்கு நோக்கியவாறு உள்ளனர். பைரவர் மூலவர் கந்தசுவாமியை நோக்கியவாறு உள்ளது சாலச்சிறப்பு.

மேலும் பைரவரின் நேர் எதிரில் கஜலட்சுமியும் உள்ளாள். ஒவ்வொரு தேய்பிறை அஷ்டமி நாளிலும் தங்கள் தனத்தைப் பெருக்கிக் கொள்ள அஷ்ட லட்சுமிகளும் பைரவரை வழிபடுவதாக புராணங்கள் கூறுகின்றன. ஆம் ! அஷ்ட லட்சுமிகளும் தங்களை வழிபடும் பக்தர்களுக்கு செல்வத்தை அள்ளிக் கொடுக்க, அஷ்டலட்சுமிகளின் செல்வம் குறைந்து கொண்டே வருமாம். அப்போது அஷ்டலட்சுமிகளும் தங்கள் செல்வத்தை மேலும் விருத்தியாக்க தேய்பிறை அஷ்டமி நாட்களில் பைரவரை வழிபடுகிறார்களாம். இங்கு அஷ்டலட்சுமிகளும் கஜலட்சுமியாய் விளங்க அனுதினமும் பைரவரை வழிபட்டு செல்வத்தை அருளும் சக்தியை விருத்தியாக்குகின்றன. எனவே, இத்தலத்தில் பைரவரை தேய்பிறை அஷ்டமி நாளில் வழிபட செல்வம் செழிக்கும் என்பது உறுதி. மூலவர் கந்தசுவாமியின் எதிரே உட்பிரகாரத்தில் கல்லால் ஆன

"வேல்" உள்ளது. சஷ்டி மற்றும் கிருத்திகை நாட்களில் அருணகிரிநாதரின் "வேல் வகுப்பு" படித்து, அவ்வேலுக்கு செவ்வரளி மலர்களால் தொடர்ந்து 6 சஷ்டி மற்றும் கிருத்திகை நாட்களில் அர்ச்சனை செய்து, 6 நெய் தீபங்கள் ஏற்றி வழிபட்டால் சத்ருக்கள், எதிரிகள் தொல்லை நிரந்தரமாக அகலும். (இத்தல யாகசாலையில் "சத்ரு சம்ஹார யாகம்" நடைபெறுகிறது). தரித்திரம், கிரகதோஷ பீடைகள் அகலும். நம்மைச் சுற்றி பகை, பீடை வந்தாலும் முருகனின் கை "வேல்" நமக்குத் துணையாக வந்து நிற்கும் இத்தல பூராட நட்சத்திர பூத வேதாளத்தின் பின்புறமுள்ள மதிற்சுவரில் "சிவ சக்திவேல்" புடைப்புச் சிற்பமாக உள்ளது. இந்த "வேல்" முன் நின்று பிரார்த்தித்து, நெய்தீபம் ஏற்றி, சிகப்பு அரளிப்பூ வைத்து வழிபட்டால் உடற்பிணிகள், கெடுவினைகள் அகன்று விடும்.

*"வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட*
*தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் - வாரி*
*குளித்த வேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்*
*துளைத்த வேல் உண்டே துணை"*

*"சேவலும் மயிலும் போற்றி*
*திருக்கை வேல் போற்றி போற்றி"*

*"சேல்பட்டு அழிந்தது செந்தூர்*
*வயல்பொழில் தேங்கடம்பின்*
*மால்பட்டு அழிந்தது பூங்கொடியார்*
*மனம் மாமயிலோன்*
*வேல்பட்டு அழிந்தது வேலையும்*
*சூரனும் வெற்பும் அவன்*
*கால்பட்டு அழிந்தது இங்கு என்தலை*
*மேல் அயன் கையெழுத்தே"*

*ஆம்! முருகனின் கை வேல் பட்டு சூரனும்,*

கிரௌஞ்ச மலையும் அழிந்தன. முருகனின் திருவடிப்பட்டு

அயனாகிய பிரம்மனால் எழுதப்பட்ட தலையெழுத்தும் மாறியது என்று பொருள். வெளிப்பிரகாரத்தில் மூலவருக்கு நேர் எதிரில் கொடிமரம், மயில், பலிபீடம் உள்ளன. கொடி மரத்துக்கு வடக்கில் உள்ள மயில் மண்டபத்தில் தனித்தனி சந்நிதிகளில் வள்ளியும், தெய்வானையும் நின்ற திருக்கோலத்தில் தெற்கு நோக்கி அருள் பாலிக்கிறார்கள். அருகிலேயே சர்வ வாத்திய மண்டபமும் உள்ளது. இம்மண்டபத்தில் தான் விழாக்காலங்களில் உற்சவருக்கு அபிஷேகம் நடைபெறுகிறது. இம்மண்டபத்திலுள்ள தூண்களில் மாரியம்மன், யோக நரசிம்மர், லஷ்மிநரசிம்மர், ஐயப்பன் சிற்பங்கள் உள்ளன. நரசிம்மர் தூணில் உதித்தவர் என்பதால் இத்தல தூணிலுள்ள யோக நரசிம்மரையும், லஷ்மி நரசிம்மரையும் செவ்வாய், ஞாயிறு மற்றும் சுவாதி நட்சத்திர தினங்களின் மாலை வேளையிலும் நெய்தீபம் ஏற்றி, பானகம் (வெல்லம் + எலுமிச்சை + ஏலக்காய் கலந்த தீர்த்தம்) படைத்து, "உக்ரம் வீரம் மகாவிஷ்ணும் ஜ்வலந்தம் சர்வதோமுகம், ந்ருசிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யு ம்ருத்யும் நமாம்யஹம்" என்ற மந்திரத்தை 9 முறை கூறி 9 முறை அந்த நரசிம்மர் தூணை சுற்றி வந்தால் வாழ்வில் வசந்தம் வீசும் என்பது ஐதீகம். கொடி மரத்திற்கு பின்னால் விளக்கேற்றும் மிகப்பெரிய கல்தூண் உள்ளது. இதில் திருக்கார்த்திகைக்கு முந்தைய நாள் "பரணி தீபம்" ஏற்றப்பட்டு தொடர்ந்து மூன்று நாட்கள் எரிய விடப்படுகிறது. இது சிவதீபம் ஆகும். மறுநாள் திருக்கார்த்திகை அன்று மாலையில் மூலவர் கருவறை விமானத்தின் மேல் ஆறு தீபங்கள் ஏற்றப்படுகின்றன.

இத்தீபங்களும் தொடர்ந்து மூன்று நாட்கள் எரிகின்றன. இவைகள் 6 தீபமும் முருகதீபமாம் ஆம் ! வெளிப்பிரகார விளக்குத்தூணில் ஏற்றப்படும் சிவதீபமாகிய ஜோதி வடிவ ஈசனின் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய ஆறு தீப்பொறிகளே ஆறுமுகன் ஆயிற்று. அதற்கேற்ப

கருவறை விமானத்தின் மேல் 6 தீபம் ஏற்றப்படுகிறதாம். இவ்வாலயத்தின் பிரதான தெற்கு நுழைவாயிலின் கிழக்குப்புறம் பூரனை புஷ்கலை சமேத ஐயனார், இடும்பன், அருணகிரிநாதர் புடைப்புச் சிற்பங்களும் மேற்குபுறம் வல்லபை கணபதி, வீரபத்திரர் உடன் நவவீரர்களின் புடைப்புச் சிற்பங்களும் உள்ளது சிறப்பு. வீரபத்திரரை பௌர்ணமி நாட்களில் வெற்றிலை சமர்பித்து, நெய்தீபம் ஏற்றி வழிபட்டால் வேண்டியன கிட்டும். இங்கு ஆலய பிரதான நுழைவு வழியிலுள்ள சுவரிலேயே வீரபத்திரர் ஜொலிப்பது நம் வாழ்வை ஜொலிக்கச் செய்யும் தலம் இது என்பதை நமக்கு சொல்லாமல் சொல்கின்றது எனலாம். இத்தல கந்தசுவாமியாருக்கு நேர் எதிரே கடைக்கண் பார்வையில் நவக்கிரகச் சந்நிதி உள்ளது. அஷ்டமி மற்றும் சனிக்கிழமைகளில் இத்தல கந்தனை வழிபட்டு, 3 நல்லெண்ணெய் தீபங்கள் ஏற்றி நவக்கிரகங்களை வழிபட்டால் சகல நவக்கிரக தோஷங்களும் உடனே அகலும். தொடர்ந்து 3 வாரங்கள் செய்து வர வேண்டும். "நாள் என் செயும்; வினைதான் என்செயும்; எனை நாடி வந்த கோள் என் செயும்; கொடும் கூற்று என் செயும் குமரேசர் இருதாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும் தோளும் கடம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே". இத்தலத்தின் தல மரங்களாக வன்னி மரமும், கருங்காலி மரமும் உள்ளன.

இத்தல மயில் மண்டபத்தின் பின்புறம் சிறப்பாக பெரியாண்டவர் பூஜையும் நடைபெறுகிறது. ஆம்! இங்கு குலதெய்வ பெரியாண்டவர் பூஜையை சிவராத்திரி, பங்குனி உத்திர நாட்களில் முடி காணிக்கைச் செலுத்தி பக்தர்கள் நிறைவேற்றி வேண்டிய வரங்களைப் பெற்று உய்கிறார்கள். பெரியாண்டவர் பூஜையை ஞாயிறு, வெள்ளி, செவ்வாய், திங்கள் கிழமைகளில் இங்கு செய்வது சிறப்பு. இவ்வாலய வெளிப்பிரகாரத்தின் உட்புறச் சுவற்றின் நான்கு புறமும் பூத வேதாளகணங்களின் புடைப்புச்

சிற்பங்களைக் காணலாம். 26 நட்சத்திர பூத வேதாளகணங்கள் வெளிப்பிரகாரச் சுவர்களிலும், 1 நட்சத்திர பூத வேதாள கணம் மட்டும் மயில் மண்டபத்தின் மேற்புறம் வெளியே மேற்கு பார்த்த வண்ணம் உள்ளது. இங்கு 1வது பூத வேதாளம் நாகலிங்க மரத்தின் அருகிலும், 27-வது பூதவேதாளம் வில்வம் மரம் அருகிலும் உள்ளது சாலச்சிறப்பு. 27 நட்சத்திர பூத வேதாள கணங்களின் மேலே அந்தந்த நட்சத்திரங்களும், அதற்குரிய பூத வேதாள கணங்களின் பெயர்களும் பக்தர்களின் வசதிக்காக குறிக்கப்பட்டுள்ளன. இத்தல விநாயகர், ஈசன், அம்பாள், கந்தசுவாமி, பைரவர் மற்றும் 27 நட்சத்திர பூத வேதாளங்களையும் வழிபட்டு, செவ்வரளி மற்றும் மரிக்கொழுந்து, இவற்றால் அர்ச்சித்து, கந்த சுவாமியாய் விளங்கும் முருகப் பெருமானின் கருவறை தீபத்தில் பசு நெய் சேர்த்து, தொடர்ந்து ஆறு வாரங்கள் செவ்வாய்கிழமைகளில் வழிபட்டு வந்தால் கண்திருஷ்டி, ஏவல், பில்லி, சூன்யம், செய்வினை தோஷங்கள், கிரக தோஷங்கள், வறுமை, பிணி, மூப்பு முதலியன அகல்கின்றன.

இந்த ஆறு வார வழிபாட்டு காலங்களிலும் கண்டிப்பாக இவ்வாலயத்திலுள்ள கந்த சுவாமி சந்நிதியிலும், நம் வீட்டு பூஜை அறையிலும் முருகப் பெருமானுக்கு உரிய, அகத்தியர் அருளிய “ஸ்ரீசுப்ரமண்ய அஷ்டகம்”, பாம்பன் சுவாமிகள் அருளிய “சண்முகம் கவசம்”, அருணகிரி நாதரின் “முகிலாமெனும் வார்குழலால்சிலை” எனத் தொடங்கும் “சேயூர் பதிகம்” எனும் இத்தல செய்யூர் திருப்புகழ் மற்றும் வடலூர் இராமலிங்க சுவாமிகளின் “சென்னை கந்த கோட்டம் கந்தசுவாமி” - தெய்வமணி மாலைத் தொகுப்பில் உள்ள “நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற நிலனுண்டு பலனும் உண்டு” எனத்தொடங்கும் பாடலையும் பாடினால் கிடைக்கும் பலன் அளப்பெரிது என்கின்றனர் பக்தர்கள். இத்தலத்தில் 27

நட்சத்திரக்காரர்களுக்கும் ஒவ்வொரு மாதத்தின் தேய்பிறை அஷ்டமி நாளில் "தேய்பிறை அஷ்டமி பூஜை" வெகு சிறப்பாக நடைபெறுகிறது. இப்பூஜை மாலை 4.30க்குத் துவங்கி இரவு 8 மணிக்கு நிறைவடைகிறது. தேய்பிறை அஷ்டமி நாளில் மாலை சரியாக 4.30க்கு பிரதான விநாயகருக்கு (தல விநாயகர்) அபிஷேகம் மற்றும் அலங்கார பூஜை நடைபெறுகிறது. பின்பு 27 நட்சத்திரங்களுக்கும் உரிய 27 பூத வேதாள கணங்களுக்கும் எண்ணெய் காப்பு மற்றும் செவ்வரளி பூக்களால் விசேஷ பூஜை நடைபெறுகிறது. அப்போது அந்தந்த நட்சத்திரத்திற்குரிய பக்தர்கள் தத்தமது நட்சத்திர பூதவேதாள கணங்களுக்கும் நறுமண மலர்கள் தூவி, நல்லெண்ணெய் தீபம் ஏற்றி வழிபடுகிறார்கள். அப்போது அர்ச்சகர் ஒவ்வொரு பூத வேதாளங்களுக்கும் தனித்தனி "தீவட்டி" கொளுத்தி வைக்கிறார். நிவேதனமாக பொரி, கடலை, சாத உருண்டை, எள்-கருப்புக்கட்டி மற்றும் வாழைப்பழம் இவற்றைப் படையலிடுகிறார். பின்பு அந்தந்த நட்சத்திர பூத வேதாளங்களுக்கும், அந்தந்த நட்சத்திரங்களுக்கும் உரித்தான ஸ்தோத்திரம் கூறி அர்ச்சித்து, மலர்தூவி, கற்பூர தீபம் காட்டி "பூதவேதாள பூஜை" யை நிறைவு செய்கிறார். பின்பு 6.30 மணி அளவில் சோமநாதருக்கும், மீனாட்சி அம்மனுக்கும் அபிஷேகம் மற்றும் அலங்கார பூஜை நடைபெறுகிறது. அதன் பின்பு இரவு 7.15 அளவில் மூலவர் கந்த சுவாமிக்கும், வள்ளி மற்றும் தெய்வானை அம்மனுக்கும் மகாஅபிஷேகம் கூடவே பைரவருக்கும் மகா அபிஷேகம் நடைபெறுகிறது.

அதனைத் தொடர்ந்து இரவு 8 மணிக்கு பைரவருக்கு "அஷ்ட புஷ்பார்ச்சனை" (எட்டு வித மலர்களால் அர்ச்சனை) மற்றும் ''மரிக்கொழுந்து'' சூட்டி அஷ்டமி பூஜை நடைபெற்று, "தேய்பிறை அஷ்டமி பூஜை" நிறைவு பெறுகிறது. ஒவ்வொரு தேய்பிறை அஷ்டமியிலும்

Dolphin Public School





ஸ்ரீ அசிதாங்க பைரவர்



ஸ்ரீ குரு பைரவர்

Dolphin Public School

உ

ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை

ஓம் சிவாய நம :

மதுரை டால்ஃபின் பள்ளி



ஸ்ரீ உன்மத்த பைரவர்



ஸ்ரீ சத்ரு சம்ஹார பைரவர்

Dolphin Public School

உ
ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை
ஓம் சிவாய நம :

மதுரை டால்ஃபின் பள்ளி



ஸ்ரீ சண்ட பைரவர்



ஸ்ரீ குரோதன பைரவர்

Dolphin Public School

உ
ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை
ஓம் சிவாய நம :

மதுரை டால்ஃபின் பள்ளி



ஸ்ரீ வயிரவமூர்த்தி, இலுப்பைகுடி




ஸ்ரீ பைரவர், நகர வயிரவன்பட்டி

உ

ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை ஓம் சிவாய நம :

மதுரை டால்ஃபின் பள்ளி

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்



ஸ்ரீ நாகாயுதபாணி வேதாளம்

நட்சத்திரம் - அஸ்வினி




ஸ்ரீ வஜ்ரதாரி வேதாளம்

நட்சத்திரம் - பரணி




ஸ்ரீ வைராக்ய வேதாளம்

நட்சத்திரம் - கிருத்திகை

அருள்மிகு கந்தசுவாமி கோயில், செய்யூர் (மேல்மருவத்தூர் வழி)

இறைப்பணியில்... **தேவகோட்டை டால்ஃபின் AR. ராமனாதன்** டால்ஃபின் பள்ளி, மதுரை. © 93451 69639

உ

ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை　　ஓம் சிவாய நம :

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்










**அருள்மிகு கந்தசுவாமி கோயில், செய்யூர் (மேல்மருவத்தூர் வழி)**

இறைப்பணியில்... **தேவகோட்டை டால்ஃபின் AR. ராமனாதன்** டால்ஃபின் பள்ளி, மதுரை. ✆ 93451 69639

உ

ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை      ஓம் சிவாய நம :

மதுரை டால்ஃபின் பள்ளி

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்

சிவ சிவ

**ஸ்ரீ வக்ரதந்த வேதாளம்**

நட்சத்திரம் - புனர்பூசம்

சிவ சிவ

**ஸ்ரீ விசாளநேத்ர வேதாளம்**

நட்சத்திரம் - பூசம்

சிவ சிவ

**ஸ்ரீ ஆனந்தபைரவபக்த வேதாளம்**

நட்சத்திரம் - ஆயில்யம்

**அருள்மிகு கந்தசுவாமி கோயில், செய்யூர் (மேல்மருவத்தூர் வழி)**

இறைப்பணியில்... **தேவகோட்டை டால்ஃபின் AR. ராமனாதன்** டால்ஃபின் பள்ளி, மதுரை. ✆ 93451 69639

உ

ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை ஓம் சிவாய நம :

மதுரை டால்ஃபின் பள்ளி

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்

சிவ சிவ

ஸ்ரீ ஞானஸ்கந்த வேதாளம்

நட்சத்திரம் - மகம்

சிவ சிவ

ஸ்ரீ தர்பகரபூத வேதாளம்

நட்சத்திரம் - பூரம்

சிவ சிவ

ஸ்ரீ வீரபாகு சேவக வேதாளம்

நட்சத்திரம் - உத்திரம்

அருள்மிகு கந்தசுவாமி கோயில், செய்யூர் (மேல்மருவத்தூர் வழி)

இறைப்பணியில்... தேவகோட்டை டால்ஃபின் AR. ராமனாதன் டால்ஃபின் பள்ளி, மதுரை. ✆ 93451 69639

உ

ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை        ஓம் சிவாய நம :

மதுரை டால்ஃபின் பள்ளி

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்




ஸ்ரீ சூரபத்ம துவம்ஸ வேதாளம்

நட்சத்திரம் - அஸ்தம்




ஸ்ரீ தாரகாசூர இம்ஸவேதாளம்

நட்சத்திரம் - சித்திரை




ஸ்ரீ ஆனந்த குகபக்த வேதாளம்

நட்சத்திரம் - சுவாதி

அருள்மிகு கந்தசுவாமி கோயில், செய்யூர் (மேல்மருவத்தூர் வழி)

இறைப்பணியில்... **தேவகோட்டை டால்ஃபின் AR. ராமனாதன்** டால்ஃபின் பள்ளி, மதுரை. ✆ 93451 69639

மதுரை டால்ஃபின் பள்ளி

உ

ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை ஓம் சிவாய நம :

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்




ஸ்ரீ சூர நிபுன வேதாளம்

நட்சத்திரம் - விசாகம்




ஸ்ரீ சண்ட கோப வேதாளம்

நட்சத்திரம் - அனுஷம்




ஸ்ரீ சிங்கமுகாசுர வேதாளம்

நட்சத்திரம் - கேட்டை

அருள்மிகு கந்தசுவாமி கோயில், செய்யூர் (மேல்மருவத்தூர் வழி)

இறைப்பணியில்... **தேவகோட்டை டால்ஃபின் AR. ராமனாதன்** டால்ஃபின் பள்ளி, மதுரை. ✆ 93451 69639

Dolphin Public School

உ

ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை ஓம் சிவாய நம :

மதுரை டால்ஃபின் பள்ளி

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்

சிவ சிவ

**ஸ்ரீ பராக்ரம வேதாளம்**

நட்சத்திரம் - மூலம்

சிவ சிவ

**ஸ்ரீ மஹோதர வேதாளம்**

நட்சத்திரம் - பூராடம்

சிவ சிவ

**ஸ்ரீ ஊர்துவ சிகாபந்த வேதாளம்**

நட்சத்திரம் - உத்திராடம்

அருள்மிகு கந்தசுவாமி கோயில், செய்யூர் (மேல்மருவத்தூர் வழி)

இறைப்பணியில்... **தேவகோட்டை டால்ஃபின் AR. ராமனாதன்** டால்ஃபின் பள்ளி, மதுரை. ✆ 93451 69639

உ

ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை ஓம் சிவாய நம :

மதுரை டால்ஃபின் பள்ளி

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்




**ஸ்ரீ கதாபாணி வேதாளம்**

நட்சத்திரம் - திருவோணம்




**ஸ்ரீ சக்ரபாணி வேதாளம்**

நட்சத்திரம் - அவிட்டம்




**ஸ்ரீ பேருண்ட வேதாளம்**

நட்சத்திரம் - சதயம்

**அருள்மிகு கந்தசுவாமி கோயில், செய்யூர் (மேல்மருவத்தூர் வழி)**

இறைப்பணியில்... **தேவகோட்டை டால்ஃபின் AR. ராமனாதன்** டால்ஃபின் பள்ளி, மதுரை. ✆ 93451 69639

மதுரை டால்ஃபின் பள்ளி

உ

ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை ஓம் சிவாய நம :

# செல்வ வளம் தரும் செய்யூர் பைரவர்




ஸ்ரீ கோரரூப வேதாளம்

நட்சத்திரம் - பூரட்டாதி




ஸ்ரீ ருருபைரவ சேவக வேதாளம்

நட்சத்திரம் - உத்திரட்டாதி




ஸ்ரீ குரோதன பைரவ பக்த வேதாளம்

நட்சத்திரம் - ரேவதி

அருள்மிகு கந்தசுவாமி கோயில், செய்யூர் (மேல்மருவத்தூர் வழி)

இறைப்பணியில்... தேவகோட்டை டால்ஃபின் AR. ராமனாதன் டால்ஃபின் பள்ளி, மதுரை. ✆ 93451 69639



மதுரை டால்ஃபின் பள்ளியின் தாளாளர் டால்ஃபின் AR. ராமநாதனின் அலுவலகம்

இலக்குமி தேவி பைரவரை வழிபடுவதால் இத்தல கஜ இலக்குமிக்கு நெய்தீபம் ஏற்றி தொடர்ந்து 6 தேய்பிறை அஷ்டமி பூஜையில் கலந்து கொண்டு வழிபட்டு வந்தால் அவரவர் நட்சத்திர தோஷங்கள், கிரக தோஷங்கள், ஜாதகத்திலுள்ள பிற தோஷங்கள், தீவினைகள் யாவும் அகன்று பதினாறு வகைப்பேறுகளும் பெற்று சகல சௌபாக்கியத்துடன் வாழலாம் என்பது திண்ணம். மேலும் வீடு மற்றும் வாகனம் வாங்கவும், வாஸ்து தோஷங்கள் அகலவும், மகப்பேறு, திருமணப்பேறு வாய்க்கவும் செய்யூர் கந்த சுவாமி கோயிலுக்கு வந்து வழிபட்டு, தொடர்ந்து 6 தேய்பிறை அஷ்டமி பூஜையில் கலந்து கொண்டு பலன் பெறலாம். இத்தலத்தில் அருணகிரிநாதருக்கு முருகன் "சேய்" (குழந்தை) வடிவில் காட்சி கொடுத்தானாம். எனவே மகப்பேறு வேண்டுவோர் இத்தலத்தில் 6 சஷ்டி திதி நாட்களில் முருகனுக்கு பால் அபிஷேகம் செய்து, 6 தேய்பிறை அஷ்டமி பூஜை வழிபாட்டில் கலந்து கொண்டு, 48 நாட்கள் காலை, மாலை தொடர்ந்து வீட்டில் 6 நெய்தீபம் ஏற்றி வைத்து அருணகிரிநாதரின் சுவாமிமலை திருப்புகழ் பாடலான "செகமாயை...." எனத் தொடங்கும் பாடலையும், பாம்பன் சுவாமிகளின் "வேற்குழவி வேட்கை"யையும் பாராயணம் செய்து வந்தால் "சேய்வரம்" (குழந்தை வரம்) கண்டிப்பாக கிட்டுமாம். அருணகிரிநாதரின் இத்தல "சேயூர் பதிகம்" திருப்புகழ் அவரின் 721-வது பாடலாக உள்ளது. மாதாந்திர தேய்பிறை அஷ்டமி, கார்த்திகை பைரவாஷ்டமி, ஆடி கிருத்திகை, தை கிருத்திகை, வைகாசி விசாகம், தைப்பூசம், பங்குனி உத்திரம், தமிழ்மாதப் பிறப்பு, சித்திரை விசு, சித்ரா பௌர்ணமி, திருக்கார்த்திகை, கந்தர் சஷ்டி சூரசம்ஹாரம் முதலிய விழாக்கள் இங்கு சிறப்பாக நடைபெறுகின்றன. பங்குனி மாதத்தில் பிரம்மோற்சவம் நடைபெறுகிறது. பங்குனி உத்திரத்தில் திருக்கல்யாணமும் நடை பெறுகிறது. ஆலயத்தின் மேற்கே சற்று தொலைவில் "செட்டி குளம்" உள்ளது. "செட்டி" என்பது முருகனின் பெயர்களுள் ஒன்று.

இந்தச் செட்டிக்குளமே ஆலயத் தீர்த்தக்குளமாகும். "பொன்னும் மெய்ப் பொருளும் தருவானை" எனும் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தேவாரப் பதிகத்தில் வரும் 10-வது பாடலில் "செட்டி அப்பனைப் பட்டனைச் செல்வ ஆரூரானை மறக்கலுமாமே" என ஈசனைப் போற்றுவதன் அர்த்தம் தெரிகிறதா?. அதாவது "செட்டி அப்பன்" என்றால் "முருகனின் தந்தை" என்று பொருள். "திருவேரகம்" எனும் சுவாமிமலை சுவாமிநாத சுவாமியை, பலபட்டை சொக்க நாதப்புலவர் இரு பொருள் பட பாடிய "வெங்காயம் சுக்கானால்" எனும் பாடலில் முருகனை "ஏரகத்துச் செட்டியார்" என்கிறார். அதனால் தான் செய்யூரில் முருகப் பெருமானே இந்தக் குளத்தை உண்டாக்கியதால் "செட்டி குளம்" என்று பெயர் பெற்றது.

பங்குனி உத்திர விழாவின் ஏழாம் நாள் நடைபெறும் தேர் திருவிழாவும், கந்தர் சஷ்டியில் நடைபெறும் "வேல் வாங்கும் விழா"வும் வெகு சிறப்பு. இத்தலத்திற்கு கோவை பாடியுள்ளார் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். எனவே, தேய்பிறை அஷ்டமி நாட்களில் இத்தல பைரவரை வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளின் "சாலைநகர் மலைக்கோயில் வயிரவர் பதிகம்" பாடி வழிபட்டால் கிட்டும் பலன் இரட்டிப்பு. இவ்வாலயத்திலுள்ள 27 நட்சத்திர பூத வேதாள கணங்களின் பெயர்கள் கீழே வரிசைப்படுத்தப் பட்டுள்ளன.

**அவை வருமாறு:**

1. நாகாயுதபாணி பூத வேதாளம் (அஸ்வினி)
2. வஜ்ரதாரி பூத வேதாளம் (பரணி)
3. வைராக்ய வேதாளம் (கார்த்திகை)
4. கட்கதாரி வேதாளம் (ரோகிணி)
5. ஞான வேதாளம் (மிருகசீரிஷம்)
6. தோமர வேதாளம் (திருவாதிரை)
7. வக்ரதந்த வேதாளம் (புனர்பூசம்)

| | | |
|---|---|---|
| 8. | விசாள நேத்ர வேதாளம் | (பூசம்) |
| 9. | ஆனந்த பைரவபக்த வேதாளம் | (ஆயில்யம்) |
| 10. | ஞான ஸ்கந்த வேதாளம் | (மகம்) |
| 11. | தர்பகர பூத வேதாளம் | (பூரம்) |
| 12. | வீரபாகு சேவக வேதாளம் | (உத்திரம்) |
| 13. | சூரபத்ம துவம்ச வேதாளம் | (ஹஸ்தம்) |
| 14. | தாரகாசூர இம்ச வேதாளம் | (சித்திரை) |
| 15. | ஆனந்த குகபக்த வேதாளம் | (ஸ்வாதி) |
| 16. | சூர நிபுன வேதாளம் | (விசாகம்) |
| 17. | சண்டகோப வேதாளம் | (அனுசம்) |
| 18. | சிங்கமுகாசூர இம்ச வேதாளம் | (கேட்டை) |
| 19. | பராக்ரம வேதாளம் | (மூலம்) |
| 20. | மஹோதர வேதாளம் | (பூராடம்) |
| 21. | ஊர்துவ சிகாபந்த வேதாளம் | (உத்திராடம்) |
| 22. | கதாபாணி வேதாளம் | (திருஓணம்) |
| 23. | சக்ரபாணி வேதாளம் | (அவிட்டம்) |
| 24. | பேருண்ட வேதாளம் | (சதயம்) |
| 25. | கோரரூப வேதாளம் | (பூரட்டாதி) |
| 26. | ருரு பைரவசேவக வேதாளம் | (உத்திரட்டாதி) |
| 27. | குரோதன பைரவபக்த வேதாளம் | (ரேவதி) |

இவ்வாலயத்தின் உற்சவமூர்த்தியாக விளங்கும் முத்துக்குமார சுவாமி தனது வலது காலை மயிலின் முதுகின் மீது வைத்து கம்பீரமாக காட்சிதருகிறார். முருகப்பெருமான் மற்றும் பூத வேதாள கணங்களுடன் இணைந்து நவ வீரர்களான வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரன் வீரமகேஸ்வரன், வீரபுரந்திரர், வீரமார்த்தாண்டன், வீரராக்கதர், வீரதீரன், வீராந்திகள் இவர்களும் தேவர்களைக் காக்க அசுரப் படைகள் உடன் போரிட்டனர். இந்த நவவீரர்களின் புடைப்புச் சிற்பங்கள் தெற்கு வாயிலின் உட்புற, வெளிப் புறச் சுவர்களிலும்

உள்ளன. தல விநாயகர் சந்நிதியின் வடப்புறம் வெளிப்பிரகாரத்தில் நாகர் சிலைகளும் உள்ளன. செவ்வாய், வெள்ளி மற்றும் ஞாயிறு இராகு காலங்களில் மஞ்சள் பொடி கலந்த பசும் பாலால் அபிஷேகம் செய்து, நாகர் சிலைகளின் முன் 2 நெய் தீபங்கள் ஏற்றி வைத்து தொடர்ந்து 9 வாரங்கள் வழிபட்டு வந்தால் திருமணைத்தடைகளும், பிற காரியத் தடைகளும் அகலும். இத்தலத்திற்கான “திருப்புகழ்” பாடலின் இறுதியில் இத்தல வழிபாட்டால் நாம் நமது ஊழ்வினை, கர்மவினையாகிய இருவினைகளையும் அகற்றிவிடலாம் என்கிறார் அருணகிரிநாதர். முற்பிறவியிலும், இப்பிறவியிலும் நாம் அறிந்தோ அறியாமலோ செய்த பாவங்களினால் பல தோஷங்கள் நம்மையும், நம் சந்ததியினரையும் வாட்டுகின்றன. இன்றைய காலகட்டத்தில் எந்தவொரு ஜாதகத்தை எடுத்துப் பார்த்தாலும் ஏதாவது ஒரு தோஷம் இல்லாமல் இல்லை.

முன்ஜென்ம வினைகளினால் ஒருவருக்கு மனநிலை பாதிப்பு, ஆட்டிச குறைபாடுகள், படிப்பில் பிடிப்பின்மை, திருமணத்தடை, செய்வினை தோஷம், பொருளாதார சிக்கல், தீயோர் நட்பு, மகப்பேறு தாமதம், புதுப்புது நோய்கள் இப்படி பல துன்பங்கள் வந்து விடுகின்றன. இப்படிப்பட்ட எந்த துன்பமாக இருந்தாலும் அதிலிருந்து தப்பிக்க வழி தெரியாமல் தடுமாறுபவர்கள், பெரிய அளவில் பரிகாரமோ, பூஜையோ, ஹோமமோ செய்ய முடியாதவர்கள் இத்தலத்தில் தேய்பிறை அஷ்டமிகளில் நடைபெறும் “பூத வேதாள பைரவ பூஜையில் தொடர்ந்து 6 தேய்பிறை அஷ்டமி பூஜைகளில் கலந்து கொண்டு முருகப் பெருமானுக்கு தேனும், திணைமாவும் நைவேத்தியம் செய்து, கருவறை தீபத்தில் தூய பசு நெய் சேர்த்து வழிபட வேண்டும். பின்பு பைரவருக்கு மிளகு தீபமும் (மிளகை சிகப்பு நிறத்துணியில் கட்டி நெய் தீபம் ஏற்றுதல்), வெண்பூசணியை இரண்டாக வெட்டி அவற்றின் நடுவில் நெய் விட்டு தீபம் ஏற்றி விட்டு, பைரவருக்கு புனுகு,

மரிக்கொழுந்து சாற்றி வழிபட்டு தயிர்சாதம் அல்லது பாகற்காய் கலந்த சாதத்தை நைவேத்தியம் செய்து வழிபட வேண்டும். அதன்பின் நமது நட்சத்திரத்துக்குரிய பூத வேதாள கணங்களுக்கு எள்-கருப்புக்கட்டி (பனை வெல்லம்) படைத்து, நல்லெண்ணெய் தீபம் ஏற்றி "பூத வேதாள பைரவ பூஜை" யை நிறைவு செய்ய வேண்டும். தொடர்ந்து 6 தேய்பிறை அஷ்டமி பூஜையில் கலந்து கொண்டு , இவ்வாறு செய்து வந்தால் படிப்படியாக நம்மை பிடித்துள்ள தோஷங்கள், கெட்டவைகள், துன்பங்கள் விலக ஆரம்பிக்கும். நல்ல விஷயங்கள் ஒவ்வொன்றாக நடக்க ஆரம்பிக்கும்.

நம்முடைய ஊழ்வினைகளும், கர்ம வினைகளும் ஆகிய இருவினைகளும் தொடர்பூஜைகளில் கலந்து கொள்ள நிறைய தடைகளை ஏற்படுத்தும். சோம்பேறித் தனத்தை உண்டு பண்ணி, நாமே ஏதாவது காரணம் சொல்லி விட்டு ஒரு சில தேய்பிறை அஷ்டமிக்குப் பிறகு நம்மை அப்பூஜையில் கலந்துக் கொள்ளச் செய்யாமல் இருத்தும். இந்த மாதிரியான தடைகளை எல்லாம் தூக்கி வீசிவிட்டு நாம் இத்தல "தேய்பிறை அஷ்டமி பூதவேதாள பைரவ பூஜை" யில் தொடர்ந்து 6 பூஜையில் கலந்து நிறைவு செய்தால் நம் இவ்வுலக வாழ்க்கையில் கந்தனும், பைரவரும் மிகுந்த நிறைவைத் தருவர். மேலும், அவ்வுலக வாழ்விலும் நற்பதம் கொடுப்பர். ஆம்! நாம் வாழும் போதும், நம் வாழ்க்கைக்குப் பிறகும் நற்பதம் கிடைக்கச் செய்யும் ஒரே புண்ணிய பூமி நம் செய்யூர் கந்தசுவாமி ஆலயமே என்றால் மிகையல்ல. இதில் ஒன்று மட்டும் நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆம்! இந்த தொடர் 6 மாத தேய்பிறை அஷ்டமி பூஜையில் கலந்து கொள்ளும் போது, இந்த 6 மாத காலமும் அசைவம் தவிர்ப்பது நல்லது. ஏனென்றால் அசைவத்தோடு தொடர்பு இருக்கும் வரை வழிபாட்டிலேயும் பலன் இருக்காது. நாம் நமது கோரிக்கைகளை இங்குள்ள நமது நட்சத்திரத்துக்குரிய பூத வேதாள கணங்களிடம் கூறினால்,

பூத கணங்கள் நமது கோரிக்கைகளை பைரவர் மூலமாக முருகப்பெருமானிடம் கொண்டு செல்லும். அக்கோரிக்கைளை நம் செய்யூர் செல்வன் கந்தசுவாமி வெகு விரைவில் நிறைவேற்றி வைக்கிறார் என்பது இத்தலத்தில் ஐதீகமாக உள்ளது.

அருணகிரிநாதரின் திருப்புகழ் பெற்ற இத்தலத்திற்கு சிவப்பிரகாச சுவாமிகள் "நெஞ்சு விடு தூது" விலும், சேறைக் கவிராயர் "சேயூர் முருகன் உலா" விலும், அந்தகக்கவி வீரராகவ முதலியார் "சேயூர் கலம்பகம்" மற்றும் "சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்", இவைகளிலும் இத்தல முருகனைப் போற்றிப் பாடியுள்ளனர். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இத்தலத்திற்குக் "கோவை" பாடியுள்ளார். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் "சாலை நகர் மலைக்கோயில்-வயிரவர் பதிகம்" தேய்பிறை அஷ்டமி நாட்களில் பாடி இத்தல பைரவரை வழிபட்டால் கிடைக்கும் பலன் இரட்டிப்பு. செய்யூர் தல புராணத்தை முத்தையா முதலியார் இயற்றியுள்ளார். ஒற்றிக் கொண்டான் குமாரன் "கழுக்குன்றன்" இவ்வாலயத்திற்கு திருப்பணிகள் பல செய்துள்ளானாம். செய்யூர் கந்தசுவாமி ஆலயத்தில் விழாக்காலங்களில் வள்ளி, தெய்வானை சமேத கந்தசுவாமிக்கு வெள்ளிக்கவசம் சாற்றப்பட்டு ஆறுமுகப்பெருமான் இங்கு அழகெல்லாம் ஒருருவாய் ஜொலிக்கின்றான். முருகன் என்றாலே "அழகு" தானே...!

"திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை" என்பார்கள். ஆம்! கலிகாலத்தில் கடைத்தேற முடியாமல் நாதியற்று நிற்கும் நமக்கு திசை காட்டி, நாம் வாழும் போதும், நம் வாழ்க்கைக்குப் பிறகும் நற்பதம் தரும் புண்ணியன் உறையும் செய்யூர் கந்தசுவாமி உடனுறை 27 நட்சத்திர பூத வேதாள பைரவர் திருக்கோயிலுக்கு சென்னை - திண்டிவனம் நெடுஞ்சாலையில் மேல்மருவத்தூரிலிருந்து நேர் எதிரில் கிழக்கில் 18 கி.மீ. தூரத்திலும், சென்னை -

புதுச்சேரி கிழக்கு கடற்கரைச் சாலையில் மாமல்லபுரம், கல்பாக்கம், கூவத்தூர் தாண்டி "எல்லையம்மன் கோயில்" பேருந்து நிறுத்தம் வந்தடைந்து மேற்கே 3 கி.மீ. தூரத்திலும் இத்தலம் அமைந்துள்ளது.

இந்துசமய அறநிலையத்துறையின் நிர்வாகத்திற்குட்பட்ட இவ்வாலய அறங்காவலராக **திரு. டாக்டர். C.R. ஸ்ரீதர்** முதலியார் அவர்கள் உள்ளார்.

**ஆலய முகவரி :**

**ஸ்ரீ கந்தஸ்வாமியார் திருக்கோயில்**

(27 நட்சத்திர பூதவேதாளம் வணங்கும் முருகன் ஆலயம்)
செய்யூர், செய்யூர் அஞ்சல்
காஞ்சிபுரம் மாவட்டம் - 603 302.

**நடை திறந்திருக்கும் நேரங்கள் :**

காலை 6-00 மணி முதல் பகல் 11-30 மணி வரை
மாலை 4-30 முதல் இரவு 7-30 மணி வரை
(விழா நாட்களில் மாறுதலுக்குட்பட்டது)

**ஆலய தொலைபேசி எண்கள் :**

(044 - 27531200, 99656 53006, 94447 29512)

இராஜராஜசோழனின் காலத்தில் இலங்கையிலுள்ள யாழ்பாணம் நல்லூர் கந்த சுவாமி கோயிலுக்கும், நம் செய்யூர் கந்தசுவாமி ஆலயத்துக்கும் பிரதிநிதியாக ஒருவரே செயல்பட்டுள்ளார் என்பது கண்டு நோக்கத்தக்கது.

**வேணும் கந்தன் வயிரவமூர்த்தி துணை**

**திருச்சிற்றம்பலம்.**



**நன்றி : கட்டுரையாளர்**

**சிவ.அ. விஜய் பெரியசுவாமி**

58A, 5வது அவென்யூ, கல்பாக்கம்
காஞ்சிபுரம் மாவட்டம்
செல் : 97874 43462

# பைரவர் தமிழ் அர்ச்சனை (108 போற்றி)

ஓம் மனமகிழ் வளிக்கும் வடுகனே போற்றி
ஓம் தனமழை பொழியும் தன்மைய போற்றி
ஓம் சிலம்பணி திருவடி திகழ் ஒளி போற்றி
ஓம் தலமெலாம் காவலாய்த் தழைத்தவ போற்றி
ஓம் வீரத்தோற்றம் விளங்குவாய் போற்றி
ஓம் கோரப் பல்லுடைக் குணக்கடல் போற்றி
ஓம் பாலகன் ஆய்வரும் பரமனே போற்றி
ஓம் கால காலனாம் கண்ணுதல் போற்றி
ஓம் வேள்வியில் தோன்றும் மெய்ப்பொருள் போற்றி
ஓம் தாள்தொழு வார்த மைத் தாங்குவாய் போற்றி
ஓம் சீரார் நடனம் செய்வாய் போற்றி
ஓம் பேரொலி எழுப்பும் பிரானே போற்றி
ஓம் ஏழகப் பெரும்படை இயக்குவாய் போற்றி
ஓம் ஏழிசைப் பயனாய் இலங்குவாய் போற்றி
ஓம் கரும்பினும் இனிய கருணையாய் போற்றி
ஓம் இருங்கடல் அமுதாய் இருப்பாய் போற்றி
ஓம் நீற்றுக் கோல நிர்மல போற்றி
ஓம் கூற்றை உதைக்கும் குழகா போற்றி
ஓம் அந்தக அசுரனை அழித்தாய் போற்றி
ஓம் முந்திவந் தாளும் முதல்வா போற்றி
ஓம் காட்டில் ஆடும் கடவுளே போற்றி
ஓம் நாட்டில் இன்பம் நல்குவாய் போற்றி
ஓம் வேழம் உரித்த விறலோய் போற்றி
ஓம் வாழ வைத்திடும் வல்லவா போற்றி
ஓம் திக்கெல்லாம் உடையாய்த் திகழ்வாய் போற்றி
ஓம் முக்கண் படைத்த முதல்வனே போற்றி
ஓம் ஆதிமூர்த்தியாம் ஆண்டவ போற்றி







ஓம் பூதநாதனாம் புண்ணிய போற்றி
ஓம் கடைசியில் பூஜை காண்பவ போற்றி
ஓம் வடுக தேவனாம் வள்ளல் போற்றி
ஓம் காசியில் ஞானக் காவலாய் போற்றி
ஓம் காசிக் கயிற்றைக் கட்டுவாய் போற்றி
ஓம் அயன்தலை கிள்ளிய அரனே போற்றி
ஓம் பயன்தரு திருமறைப் பாடலாய் போற்றி
ஓம் சீலம் பெருக்கும் சிவசிவ போற்றி
ஓம் கால வயிரவக் கடவுளே போற்றி
ஓம் அட்ட மூர்த்தியாய் ஆனவ போற்றி
ஓம் சட்டை நாதனாம் தன்மைய போற்றி
ஓம் மரகத நிறமுடை மணியே போற்றி
ஓம் கரங்கள் எட்டுடைக் கற்பகம் போற்றி
ஓம் போர்க்கோ லத்தில் பொழிவாய் போற்றி
ஓம் பார்க்கும் கண்தவப் பலனே போற்றி
ஓம் தீயேனும் சடைமுடிச் சிவமே போற்றி
ஓம் மாயப்பிறவி மருந்தே போற்றி
ஓம் கட்டுக் கடங்காக் காவலா போற்றி
ஓம் எட்டுருக் கொள்ளும் இறைவனே போற்றி
ஓம் நற்றவத் தோர்க்கருள் நல்குவாய் போற்றி
ஓம் பொற்குடம் ஏந்திப் பொலிபவ போற்றி
ஓம் பயத்தினைப் போக்கும் பரனே போற்றி
ஓம் வயிரவி உடனுறை வயிரவ போற்றி
ஓம் ஒளிமிகு சூலம் உடையவ போற்றி
ஓம் வளமெலாம் அருளும் வளரொளி போற்றி
ஓம் நாகம் அணியும் நாயக போற்றி
ஓம் வேகவடிவாய் விளங்குவாய் போற்றி
ஓம் உலககெலாம் தானாய் ஒளிர்வாய் போற்றி

ஓம் கலைதெரி ஞானக் கடலே போற்றி
ஓம் படைக்கத் தாண்டவம் பயில்வாய் போற்றி
ஓம் கடைக்கண் ணால்துயர் களைவாய் போற்றி
ஓம் மைவளர் கண்டர் வடிவே போற்றி
ஓம் வைரவக் கோல மணியே போற்றி
ஓம் கோயில் திறவுகோல் கொண்டவ போற்றி
ஓம் தாயில் சிறந்த தத்துவ போற்றி
ஓம் வீடளித் தாளும் வித்தக போற்றி
ஓம் ஆடையாய் உலகை அணிந்தாய் போற்றி
ஓம் சடைமுடி தரித்த சங்கர போற்றி
ஓம் அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி
ஓம் பேயுடன் ஆடும் பிரானே போற்றி
ஓம் நாயே ஊர்தியாய் நயந்தாய் போற்றி
ஓம் மண்டை ஓட்டு மாலையாய் போற்றி
ஓம் கண்டவர் அஞ்சும் காட்சியாய் போற்றி
ஓம் உடுக்கை கையில் உடையாய் போற்றி
ஓம் உடுக்கை இல்லா உயர்தவ போற்றி
ஓம் செய்வினை மாற்றும் திருவருள் போற்றி
ஓம் வையகம் காக்கும் வடுகனே போற்றி
ஓம் நன்மனக்கோயில் நாடுவாய் போற்றி
ஓம் பொன்மழை வாழ்வில் பொழிவாய் போற்றி
ஓம் மூலா தார முழு முதல் போற்றி
ஓம் நாலாம் வேத நாயக போற்றி
ஓம் நெஞ்சில் அச்சம் நீக்குவாய் போற்றி
ஓம் கொஞ்சும் தமிழால் குழைவாய் போற்றி
ஓம் அன்புக் கெளிவந் தருள்வாய் போற்றி
ஓம் வன்பகை மாற்றும் வயிரவ போற்றி

ஓம் பூத நாதனாய்ப் பொலிவாய் போற்றி
ஓம் மாதவப் பயனாய் வருசிவ போற்றி
ஓம் நீற்றுக் கோல நின்மலா போற்றி
ஓம் கூற்றின் ஆற்றல் குறைப்பாய் போற்றி
ஓம் செந்தமிழ் விரும்பும் சிவமே போற்றி
ஓம் சந்ததம் இன்பம் தருவாய் போற்றி
ஓம் ஞானமும் வீரமும் நல்குவாய் போற்றி
ஓம் வானவர் வழிபடும் மாமணி போற்றி
ஓம் அம்மையும் அஞ்சும் ஆற்றலாய் போற்றி
ஓம் செம்மை விளங்கச் சிரிப்பாய் போற்றி
ஓம் கங்கையைச் சடையில் கரந்தாய் போற்றி
ஓம் மங்கலச் செல்வம் வழங்குவாய் போற்றி
ஓம் கற்றவர் விரும்பும் நற்றவ போற்றி
ஓம் மற்றவர் நெஞ்சில் மறைவாய் போற்றி
ஓம் படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
ஓம் எடுத்த நற்பணி முடிப்பாய் போற்றி
ஓம் மறைமொழி விளங்க வகுத்தாய் போற்றி
ஓம் திருமுறைக் கிருசெவி திறப்பாய் போற்றி
ஓம் பேராயிரமுடைய பெருமான் போற்றி
ஓம் தீராவினைகள் தீர்ப்பாய் போற்றி
ஓம் நம்பும் அடியார் நாயக போற்றி
ஓம் கும்பிடு வார்க்கருள் கொடுப்பாய் போற்றி
ஓம் மும்மலம் மாற்றும் மூர்த்தியே போற்றி
ஓம் செம்மலர் நோன்றாள் சேர்ப்பாய் போற்றி
ஓம் உயர்வற உயர்நலம் உடையவ போற்றி
ஓம் வயிரவக் கடவுள் மலரடி போற்றி

*வாழ்க வளமுடன் !*

ஓம் திருச்சிற்றம்பலம்
தென்னாடுடைய சிவனே போற்றி !
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி !

# ஸ்ரீ ஸ்வர்ணாகர்ஷண பைரவ அஷ்டகம்

**(ஸ்ரீ துர்கைச் சித்தர் அருளியது)**

தனந்தரும் வயிரவன் தளிரடி பணிந்திடின் தளர்வுகள் தீர்ந்துவிடும்
மனந் திறற் தவன்பதம் மலரிட்டு வாழ்த்திடின் மகிழ்வுகள் வந்துவிடும்
சினந்தவிர்த் தன்னையின் சின்மயப் புன்னகை சிந்தையில் ஏற்றவனே
தனக்கிலை யீடு யாருமே என்பான் தனமழை பெய்திடுவான் 1

வாழ்வினில் வளந்தர வையகம் நடந்தான் வாரியே வழங்கிடுவான்
தாழ்வுகள் தீர்ந்திட தளர்வுகள் மறைந்திட தானென வந்திடுவான்
காழ்ப்புகள் தீர்த்தான் கானகம் நின்றான் காவலாய் வந்திடுவான்
தனக்கிலை யீடு யாருமே என்பான் தனமழை பெய்திடுவான் 2

முழுநில வதனில் முறையோடு பூஜைகள் முடித்திட அருளிடுவான்
உழுதவன் விதைப்பான் உடமைகள் காப்பான் உயர்வுறச் செய்திடுவான்
முழுமலர்த் தாமரை மாலையை ஜெபித்து முடியினில் சூடிடுவான்
தனக்கிலை யீடு யாருமே என்பான் தனமழை பெய்திடுவான் 3

நான்மறை ஓதுவார் நடுவினில் இருப்பான் நான்முகன் நானென்பான்
தேனினில் பழத்தைச் சேர்ந்தவன் ருசிப்பான் தேவைகள் நிறைத்திடுவான்
வான்மழை எனவே வளங்களைப் பொழிவான் வாழ்த்திட வாழ்த்திடுவான்
தனக்கிலை யீடு யாருமே என்பான் தனமழை பெய்திடுவான் 4

பூதங்கள் யாவும் தனக்குள்ளே வைப்பான் பூரணன் நான் என்பான்
நாதங்கள் ஒலிக்கும் நால்வகை மணிகளை நாணினில் பூட்டிடுவான்
காதங்கள் கடந்து கட்டிடும் மாயம் யாவையும் போக்கிடுவான்
தனக்கிலை யீடு யாருமே என்பான் தனமழை பெய்திடுவான் 5

பொழில்களில் மணப்பான் பூஜைகள் ஏற்பான் பொன்குடம் ஏந்திடுவான்
கழல்களில் தண்டை கைகளில் மணியனி கனகனாய் இருந்திடுவான்
நிழல்தரும் கற்பகம் நினைத்திட பொழிந்திடும் நின்மலன் நானென்பான்
தனக்கிலை யீடு யாருமே என்பான் தனமழை பெய்திடுவான் 6

சதுர்முகன் ஆணவத் தலையினைக் கொய்தான் சத்தோடு சித்தானான்
புதரினில் பாம்பைத் தலையினில் வைத்தான் புண்ணியம்செயென்றான்
பதரினைக் குவித்து செம்பினை எரித்தான் பசும்பொன் இதுவென்றான்
தனக்கிலை யீடு யாருமே என்பான் தனமழை பெய்திடுவான் 7

ஜெயஜெய வடுக நாதனே சரணம் வந்தருள் செய்திடுவாய்
ஜெயஜெய சேஷத்திர பாலனே சரணம் ஜெயங்களைத் தந்திடுவாய்
ஜெயஜெய வயிரவா செகம் புகழ் தேவா செல்வங்கள் தந்திடுவாய்
தனக்கிலை யீடு யாருமே என்பான் தனமழை பெய்திடுவான் 8







# அருணகிரிநாதர் பாடிய சேயூர் முருகன் திருப்புகழ்

முகிலாமெனும் வார்குழ லார்சிலை
புருவார்கயல் வேல்விழி யார்ச்சி
முகவார்தர ளாமென வேநகை புரிமாதர்

முலைவாலினை கோபுர மாமென
வாடமாடிய வேகொடி நூலிடை
முதுபாளிதசேலைகு லாவிய மயில்போல்வரர்;

அகிசேரல்கு லார்தொடை வாழையின்
அழகார்கழ லார்தர வேய்தரு
அழகார்கன நூபுர மாடிட நடைமேவி

அனமாமென யாரையு மால்கொள
விழியால்சுழ லாவிடு பாவையர்
அவர்பாயலி லேயடி யேனுட லழிவேனா;

சுகனார் பதி யோர்முறை கோவென
இருள்காரசு ரார்படை தூள்பட
கட லேழ்கிரி நாகமு நூறிட விடும் வேலா

கமலாலய நாயகி வானவர்
தொழுமீசுர னாரிட மேவிய
கருணாகர ஞானப ராபரையருள் பாலா;

மகிழ்மாலதி நாவல்ப லாகமு

குடனாடநி லாமயில் கோகில

மகிழ்நாடுறை மால்வளி நாயகி மணவாளா

மதிமாமுக வாடிட யேனிரு

வினைதூள் படவே அயிலேவிய

வளவாபுரி வாழ்மயில் வாகன பெருமானே!

## தல சம்பந்தமான நூல்கள் :

செய்யூர் கந்தஸ்வாமி பெருமானைப் பாடி அந்தக்கவி வீரராகவ முதலியார் இயற்றிய சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், சேயூர் கலம்பகம், சேறை கவிராஜ பிள்ளையின் சேயூர் முருகன் உலா, ஸ்ரீ முருகதாச ஸ்வாமிகளின் சேயூர் முருகன் பதிகக் கோவை, சிவப்பிரகாச சுவாமிகளின் நெஞ்சுவிடுதூது ஆகிய நூல்கள் தோன்றியுள்ளன.

மிக முக்கியமாக இத்தலம் அருணகிரிநாதரால் திருப்புகழ் பாடல்பெற்ற ஒரு தலமாகும். இத்தல முருகனை புகழ்ந்து பாடிய அருணகிரிநாதருக்கு தீபாராதனை மண்டபத்தில் சிலையும், அவர் பாடிய பதிகங்களின் கல்வெட்டும் காணப்படுகிறது.







## டால்ஃபின் AR. ராமநாதன் விண்ணப்பம்

### நாட்டுக்கோட்டை நகரத்தார் சிறப்பு !

சிட்டுக்குருவி, சிற்றெறும்பு போல் பொருள் சேர்க்கும் நகரத்தார்
காட்டிய வழியில் உழைத்தால் வீடு உயரும் ! நாடு உயரும் !!
வட்டங்கள் சதுரங்கள் எதிலும் அடங்காது,
செட்டிநாட்டு நகரத்தார் செய்த திருப்பணிகள் !
கேட்டுப் பிறப்பேன் ஈசனிடத்தில் இன்னும் ஒரு பிறவிஇருந்தால்
நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தில் பிறந்து,
விட்டுப்போன ஆன்மீகப்பணி, தமிழ்ப்பணி தொடர...

**டால்ஃபின் AR. ராமநாதன்**

### ✳ வாழ்க்கை தத்துவம் ✳

நல்லாவின் பால்முழுதும் கன்றுக்கில்லை
நறும்பூவின் மணம் முழுதும் சோலைக்கில்லை
நெல்லாகும் கதிர்முழுதும் நிலத்துக்கில்லை
நிறைகின்ற நீர்முழுதும் குளத்துக்கில்லை
பல்லாரும் கனிமுழுதும் மரத்துக்கில்லை
பண்ணரம்பின் இசைமுழுதும் யாழுக்கில்லை
எல்லாமே பிறர்க்குழைக்கக் காணுகின்றேன்
என்வாழ்வும் பிறர்க்குழைக்க வேண்டும்! வேண்டும்!

நன்றி : டாக்டர் வ.சுப. மாணிக்கம்

இறைப்பணியில்... **டால்ஃபின் ராமநாதன்**




**டால்ஃபின் பள்ளி**

தி கிளாஸிக் பிரிண்டர்ஸ் மதுரை போன் 2323819

உ
ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை
ஓம் சிவாய நம :

# தேவகோட்டை அரு.லெ.வீடு டால்ஃபின் ராமனாதனின்



ஐயா **SV.RM.AR. ராமனாதன் செட்டியார்**



அப்பத்தா
**RM. விசாலாட்சி ஆச்சி**



ஆயா வீட்டு ஐயா பெ. வீடு
வீரப்ப சுவாமிகள்



தாயார் மீனாட்சி ஆச்சியின் அப்பத்தா
**கண்டனூர் மீனாட்சி பாட்டி**



தந்தை
**AR.RM.AR. அருணாச்சலம் செட்டியார்**



பெரிய தாயார்
**AR. சௌந்தரம் ஆச்சி**

**இவர்களின் நல்லாசிகளுடன் இந்த இலவச பக்தி மலரை வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறோம்.**

இவண்



AR. ராமனாதன்

[illegible]
[illegible]

நல்லாசியுடன்
AR. [illegible]
23.4.2010

மதுரை
23.4.2010



AR. மீனாட்சி ஆச்சி
AR. ராமனாதனின் தாயார்

உ
ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் துணை
ஓம் சிவாய நம :

Dolphin Mat. Hr. Sec. School

# தேவகோட்டை

## அரு. ராமனாதனின் தந்தை

## தெய்வத்திரு. அரு. ராம. அரு. அருணாச்சலம் செட்டியார்

## மற்றும் பெரிய தாயார் அரு. சௌந்தரம் ஆச்சி

## அவர்களின் நல்லாசிகளுடன் ...

# மதுரை டால்ஃபின் பள்ளி

# கல்விப் பணியில்... 28ம் ஆண்டு

**இறைப்பணியில் ...**

AR. ராமனாதன்

**தேவகோட்டை அரு.லெ.வீடு டால்ஃபின் AR. ராமனாதன்,**
**தலைவர் மற்றும் நிறுவனர், தேவகோட்டை**
**டால்ஃபின் ராமனாதன் தமிழ்ப்பணி மற்றும்**
**ஆன்மிகப்பணி அறக்கட்டளை, மதுரை - 10.**
**தாளாளர், டால்ஃபின் பள்ளி, மதுரை - 10.**
Ph – 93451 69639, 99439 25200
Email: dolphinschool2009@gmail.com
Web: www.devakottaidolphinramanathan.com

Dolphin Public School

AR. ராமனாதன்

ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய்.

நல்லாசியுடன்
AR. [illegible]
23.4.2010

AR. மீனாட்சி ஆச்சி
AR. ராமனாதனின் தாயார்